*Tanjore Saraswati Mahal Series No. 80.*

# RĀGA ĀLĀPANĀS & ṬHĀYAMS

In Devanagari & Tamil Scripts.
(Standard Compositions in Music.)

# ராக ஆலாபனைகளும் டாயங்களும்

(சங்கீத லக்ஷ்ய சாஹித்யங்கள்)



1958

(50)

*Tanjore Saraswati Mahal Series No. 80*

# RĀGA ĀLĀPĀNAS
# &
# THĀYAMS

**In Devanagari & Tamil Scripts**
**Being Standard Compositions in Music**

Edited with Ragalakshanas and an introduction on Raga-formation in English and Tamil

BY
SANGĪTA KALĀ ŚIKHAMAṆI
SRI K. VASUDEVA ŚĀSTRI, B.A.,
Research Pandit, Saraswati Mahal Library
TANJORE

Published by
Sri S. GOPALAN, B.A., B.L.,
Hony. Secretary,
For The Administrative Committee,
SARASWATI MAHAL LIBRARY.
TANJORE
1958

Price Rs. 6/-

தஞ்சை சரஸ்வதி மஹால் வெளியீடு நெ. 80

# ராக ஆலாபனைகளும் டாயங்களும்

தஞ்சை சஹாஜி மன்னரால் சேகரிக்கப்பட்ட
லக்ஷ்ய சாகித்தியங்கள்

இஃது
ராக லக்ஷணங்களோடும்
ராக அமைப்பைப்பற்றிய விரிவான முகவுரையோடும்

தஞ்சை சரஸ்வதி மஹால் ஆராய்ச்சி ஆசிரியர்
சங்கீத கலா சிகாமணி
ஸ்ரீ K. வாசுதேவ சாஸ்திரி B. A.,
அவர்களால் பதிப்பிக்கப்பட்டது.

*

தஞ்சை சரஸ்வதி மஹால் நிர்வாகக் குழுவினருக்காக
கௌரவ காரியதரிசி
ஸ்ரீ S. கோபாலன் B.A., B.L.,
அவர்களால் பிரசுரிக்கப்பட்டது.

1958

விலை ரூ. 6/-

# Table of Contents.

## பொருளடக்கம்



## Rāga Ālāpanas

## ராக ஆலாபனைகள்

# THĀYAMS

## டாயங்கள்

---



—:—

---

# முகவுரை

இந்த வெளியீட்டில் நமது கர்னடக சங்கீதத்தில் ராகங்களைக் கற்றுக்கொள்வதற்காக சுமார் 200, 300 வருஷங்களுக்கு முன் ஏற்பட்ட 'ஆலாபங்கள்', 'டாயங்கள்' என்னும் சாகித்யங்கள் அடங்கியிருக்கின்றன. இவை தஞ்சை சரஸ்வதி மஹாலில் உள்ளதும் தஞ்சை மகாராஷ்டிர மன்னர் சஹாஜி ராஜா (1684 – 1711)-வினல் சேகரிக்கப்பட்டதுமான கலைப் பொக்கிஷத்திலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றன. மன்னர் சஹாஜி சங்கித சாஹித்யக் கலைகளில் மிகவும் வல்லவர். அவரால் தெலுங்கிலும், மராத்தியிலும், ஹிந்தியிலும் சுமார் 1000 பதங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. நமது கர்னடக சங்கீதத்தில் ராகங்களுக்கான லக்ஷ்ய சாகித்தியங்களையும் ராக லக்ஷணங்களையும் பல சம்பிரதாயங்களைச் சேர்ந்த வித்துவான்களைக்கொண்டு எழுதுவித்து லக்ஷணங்களை 10 சுவடிகளிலும் லக்ஷ்ய சாகித்யங்களை 20 சுவடிகளிலும் சேர்த்து வைத்திருக்கிருர். அவைகளில் சுமார் 100 ராகங்களுக்கான லக்ஷ்ய லக்ஷணங்கள் அடங்கியிருக்கின்றன. அவராலேயே கர்னடக ராகங்களுக்கும் ஹிந்துஸ்தானி ராகங்களுக்கும் லக்ஷணங்கள் எழுதப்பட்ட இரண்டு சுவடிகளும் இருக்கின்றன. இந்தக் கலைப் பொக்கிஷம் நமது சங்கீத வளர்ச்சிக்கு எவ்வளவு உபயோகமுள்ளவை, எவ்வளவு அவசியமானவை என்பதை அளவிட்டுச் சொல்ல இயலாது. இப்பொழுது இந்தக் கலை பொக்கிஷம் நமது நாட்டிற்குப் பயன்படும்படி வெளியிடும் பணி இந்நூல் நிலையத்தாரால் துவக்கப்பட்டிருக்கிறது. இதில்கண்ட பகுதியில் ஒன்பது ராகங்களுக்கான ஆலாப, டாயங்கள் அடங்கியிருக்கின்றன. மற்ற ராகங்களுக்கான ஆலாப, டாயங்களும் மற்ற லக்ஷ்ய சாகித்தியங்களும் இனி தொடர்ச்சியாக வெளியிடப்படும்.

இவ்வெளியீடு நமது சங்கீதத்தின் வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்படுமென்று நம்புகிறோம்.

இந்த வெளியீடு நமது சரஸ்வதி மகால் ஆராய்ச்சி ஆசிரியர் சங்கீத கலாசிகாமணி, K. வாசுதேவ சாஸ்திரி அவர்களால் ராக லக்ஷணங்களைப் பற்றிய விரிவான முகவுரையுடன் பதிப்பிக்கப் பட்டிருக்கிறது. அன்னார் அரிய சேவைக்கு எமது நன்றி உரித்தாகும்.

நமது பாரத மத்ய சர்க்கார் அவர்கள் நமக்கு அன்புடன் அளித்த நிதி உதவியைக்கொண்டு இந்த நூலும் ஏனைய அரிய நூல்களும் வெளியிடப்பட்டிருக்கின்றன. அந்த உதவிக்காக அவர்களுக்கு நாங்கள் எப்போதும் கடமைப்பட்டுள்ளோம்

*சரஸ்வதி மஹால்,*
*தஞ்சாவூர்.*
*26—3—58*

S. கோபாலன்.

# முகவுரை.

—:—

இதில் அடங்கிய ராக ஆலாபனைகளும் டாயம் என்னும் பிடிவரிசைகளும் தஞ்சை ஸஹாஜீ மன்னரால் (1684–1711) சேகரிக்கப்பட்டு தஞ்சை ஸரஸ்வதி மஹால் நூல் நிலையத்தில் காப்பாற்றப்பட்டு வருகிற சங்கீத லக்ஷிய சாஹித்யச் சுவடிகளினின்றும் எடுக்கப்பட்டவை. இந்த சாஹித்யங்களில் ராகங்களின் சாயைகளையும், சஞ்சாரங்களையும் தெளிவாகக் கற்றுக்கொள்வதற்கான நான்கு வகை உருப்படிகள் அடங்கியிருக்கின்றன. அவைகளுக்கு முறையே ஆலாபம், டாயம், கீதம், ப்ரபந்தம் என்று பெயர். இந்த நான்கும் சதுர்தண்டி என்ற பெயரால் அழைக்கப்படுகின்றன. இவை 14-வது நூற்றாண்டு முதல் பழக்கத்தில் வந்திருக்கிறதாகத் தெரிகிறது. தற்காலத்தில் வர்ணம் கீதம் இவ்விரண்டும் ராகச் சாயையும், ராக சஞ்சாரத்தையும் தெரிந்து கொள்வதற்கு எவ்வாறு பயன்படுகிறதோ அதே வகையில் இந்த நால் வகை சாஹித்யங்களும் 1400 முதல் 1700 வரையில் சங்கீத வித்வான்களுக்குப் பயன் பட்டு வந்திருக்கின்றன. அவைகளை சாஹித்யம் செய்ய வேண்டிய முறை தஞ்சை நாயக்க மன்னரான ரகுநாத நாயக்கர் (1615–1635), அவருடைய மந்திரி கோவிந்த தீக்ஷிதர் இவர்களால் இயற்றப்பட்ட சங்கீத ஸுதா என்னும் நூலிலும் கோவிந்த தீக்ஷிதர் குமாரரான வேங்கடமகியால் இயற்றப்பட்ட சதுர்தண்டி ப்ரகாசிகை என்னும் நூலிலும் விவரிக்கப்பட்டிருக்கிறது. பொதுவாக ராக ஆலாபனை செய்யும் வழி இந்த இரண்டு நூல்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் ஒவ்வொரு ராகத்தையும் தனித்தனியே ஆலாபனை செய்யும் முறை சங்கீத ஸுதாவில் தான் காணப்படுகிறது. 50 வருஷங்களுக்கு முன் தீக்ஷிதர் க்ருதிகளையும் வேறு சில க்ருதிகளையும் ஸ்வரஸாஹித்யத்துடன் சுப்பராம தீக்ஷிதர் என்பவர் சங்கீத சம்பிரதாயப் பிரதர்சினி என்ற நூலில் தெலுங்கு லிபியில் வெளியிட்டிருக்கிறார். அந்த நூலின் முகவுரையிலும் ஆலாபனை க்ரமம் விவரிக்கப்பட்டிருக்கிறது. ஸஹாஜீ மஹாராஜாவினால் சேகரிக்கப்பட்ட சுவடிகளில் சுமார் 100 ராகங்களுக்கு சதுர்தண்டி சாஹித்யங்கள், சில

இரண்டு மூன்று சம்பிரதாயத்தைச் சேர்ந்தவையாகவும், அடங்கியிருக்கின்றன.

### டாயம், ப்ரபந்தம்

ஆலாபம், கீதம் இவ்விரண்டும் என்ன என்பதைப் பற்றி நாம் அறிவோம். டாயம், ப்ரபந்தம் என்ற இரண்டு சொற்களும் இப்பொழுது வழக்கொழிந்து போய்விட்டன. டாயம் என்ற சொல் 'ஸ்தாயம்' என்ற வடமொழிச் சொல்லின் திரிபு. ராகங்களின் சாயைகள் அடங்கிய பிடிவரிசைகளே இந்தப் பெயரால் அழைக்கப்பட்டு வந்தன. இந்தப் பிடிகளை ஒவ்வொரு பிடியும் ராகத்தின் உருவை அமைப்பதில் எந்த பங்கை எடுத்துக்கொள்கிறது என்பதைப் பொறுத்தும், அந்தப் பிடிகளை உண்டாக்கும் முறையைப் பொறுத்தும் பலவகையாகப் பிரித்திருக்கிறார்கள். 12-ம் நூற்றாண்டில் ஏற்பட்ட சங்கீத ரத்னாகரம் என்னும் நூலில் 96 வகை டாயங்களின் பெயர்களும் அவற்றின் விவரமும் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த 96 வகைகளும் இரண்டு தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு தொகுதி டாயங்கள் ராகத்தில் பயன்படும் வகையைப் பொறுத்தது. முதல் வகையில் பஜன ஸ்தாயம், ஸ்தாபன ஸ்தாயம் முதலிய பெயர்களும், இரண்டாவது வகையில் டால ஸ்தாயம், லவனீ ஸ்தாயம், வஹனீ ஸ்தாயம், வாத்யசப்த ஸ்தாயம் முதலிய பெயர்களும் அடங்கியிருக்கின்றன. ஆனால் ஸஹாஜி மஹாராஜா சேகரித்துள்ள டாயங்களுக்கு மேலே குறிப்பிட்ட பெயர்கள் எதுவும் இடப்படவில்லை. டாயங்களை அவை முடியும் ஸ்வரத்தை ஆதாரமாகக்கொண்டு பல தொகுதிகளாகத் தொகுத்திருக்கிறார்கள். ப்ரபந்தம் என்பது சங்கீத உருப்படியின் வகைக்குப் பெயர். தற்காலத்தில் சங்கீத உருப்படிகளில் க்ருதி, பதம், ஜாவளி முதலிய சில வகைகளே இருந்து வருகின்றன. ஆனால் நமது நாட்டில் ஒரு காலத்தில் நூற்றுக்கணக்கான உருப்படி வகைகளும் அவற்றைச் சார்ந்த ஆயிரக்கணக்கான கிளை வகைகளும், பழக்கத்தில் இருந்திருக்கின்றன. இந்த உருப்படிகளுக்கே ப்ரபந்தங்கள் என்று பெயர். ப்ரபந்தங்கள் பொதுவாக நான்கு பாகங்களால் ஆக்கப்பட்டவை. அவற்றில் வார்த்தைகளும் ஸ்வரங்களும், வாத்ய சப்தங்களும் இடம் பெறலாம். சில

ப்ரபந்தங்களில் பல ராகங்களும் தாளங்களும் அடங்கியிருக்கும். இவை பெரும்பாலும் நமது நாட்டில் ஏற்பட்ட இருள் யுகத்தில் (அதாவது வட இந்தியாவில் 1000 முதல் 1200-ம் வருஷத்திற்குள்ளும் தென்னட்டில் 1300 முதல் 1400-ம் வருஷத்திற்குள்ளும்) அழிந்து போயின. சில ப்ரபந்தங்கள் நாட்டின் மூலை முடுக்குகளில் 1750 வரையில் மிஞ்சியிருந்தன. இவற்றுள் சில அபூர்வமான சாஹித்யங்களாக 1850 வரையில் இருந்து மறைந்தன. தற்காலம் பழைய ப்ரபந்தம் எதுவும் பழக்கத்தில் இல்லை. அவற்றின் ஸ்தானத்தில் க்ருதிகள் அல்லது கீர்த்தனங்கள், பதங்கள் முதலியவை வழக்கத்திலிருந்து வருகின்றன. இந்த உருப்படிகளில் பொதுவாக மூன்று பகுதிகளே காணப்படுகின்றன. ஸஹாஜி ராஜாவால் சேகரிக்கப்பட்ட சாஹித்யங்களில் 1700-ம் வருஷ வாக்கில் எஞ்சியிருந்த சில பழைய ப்ரபந்தங்கள் காணப்படுகின்றன.

## ராக ஆலாபமும் அதன் மார்க்கமும்

ஆலாபம் என்றால் ஒரு ராகத்தை விஸ்தாரம் செய்தல் இதில் ஒரே வகையான ரஸபாவத்திற்குரிய, ஒரே வகையான ரஞ்சன சக்தியோடு கூடிய பல பிடிகளை கற்பனை செய்வதே இதன் முறை. இதை எப்படி அமைப்பது என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டுமானல் முதலில் ரஞ்சனமுள்ள ஓர் பிடியைக் கற்பனை செய்யும் விதத்தை அறிந்துகொள்ள வேண்டும். அதன் பிறகு ஒரே வகையான ரஸபாவத்திற்குரிய பல பிடிகளை எப்படி உண்டாக்குவது என்பதை அடுத்தபடியாக அறியவேண்டும். ரஞ்சனமுள்ள பிடி என்றால் ஓர் பிடியை பிரயோகம் செய்வதை நாம் கேட்டவுடன் அது நமக்கு ஓர் திருப்தியை அளிக்க வேண்டும். இந்த திருப்தி என்பது அந்தப் பிடி முடிவடைந்து விட்டது என்ற உணர்ச்சி நமக்கு ஏற்படுவதினலேயே உண்டாகிறது. திருப்தியை அளிக்காத பிடிகளில் ஏதோ அந்தப் பிடி இன்னும் முடியவில்லை என்றும் இன்னும் சிறிது தூரம் சஞ்சாரம் செய்யவேண்டும் என்ற உணர்ச்சி நமக்கு ஏற்படுகிறது. இதை அனுபவத்தில் நாம் பார்க்க வேண்டுமானல் ஸ, ஸரி, ஸரிகா, ஸரிகமா, ஸரிகமபா என்ற ஐந்து பிடிகளையும் அடுத்தடுத்துப் பாடிப் பார்க்கலாம். அப்போது கடைசியிலுள்ள இரண்டு பிடிகளும்

நமக்கு நல்ல திருப்தியை அளிக்கிறது என்பதும் முதல் மூன்று பிடிகளிலும் திருப்தி அவ்வளவாக ஏற்படவில்லை என்பதும் புலனாகும். இதைக்கொண்டு நாலாவது பிடியிலுள்ள மத்யமஸ்வரத்திற்கும், ஆரம்பிக்கும் ஷட்ஜத்திற்கும் அதுபோல ஐந்தாவது பிடியின் முடிவிலுள்ள பஞ்சமத்திற்கும் ஆரம்பஸ்வரமான ஷட்ஜத்திற்கும் ஓர் நெருங்கிய உறவு அமைந்திருக்கிறது என்று தெரிந்துகொள்ளுகிறோம். இந்த உறவு ஷட்ஜத்திற்கும், ரிஷபத்திற்கும் இடையேயும், ஷட்ஜத்திற்கும் காந்தாரத்திற்குமிடையேயும் அமையவில்லை என்பதையும் காண்கிறோம். மஹரிஷிகளால் நமக்கு அளிக்கப்பட்டிருக்கும் சங்கீத சாஸ்திரத்தில் முதல் முதலாக ஸ்வரங்களுக்குள்ள இந்த உறவைப்பற்றித்தான் முதலில் பேசப்பட்டிருக்கிறது.

## வாதி, சம்வாதி, விவாதி, அனுவாதி

ஏழு ஸ்வரங்களையும் அவைகளுக்குள் ஒன்றுக்கொன்று உள்ள உறவின் தன்மையைப் பொறுத்து சம்வாதிகள், அனுவாதிகள், விவாதிகள் என மூன்று வகையாகப் பிரித்திருக்கிறார்கள். மிகவும் நெருங்கிய உறவுள்ள ஸ்வரங்களை சம்வாதிகள் என்று அழைத்திருக்கின்றனர். அதைத் தமிழில் கிளையிசைகள் என்று அழைக்கிறோம். அதற்கு சிறிது குறைந்த உறவுள்ள ஸ்வரங்களை அனுவாதிகள் என அழைத்திருக்கின்றனர். அவற்றைத் தமிழில் நட்பிசைகள் என்கிறோம். ஒன்றுக்கொன்று சற்றும் உறவில்லாத ஸ்வரங்களுக்கு விவாதிகள் எனப் பெயரிட்டிருக்கிறார்கள். அவைகளையே நாம் தமிழில் பகையிசைகள் என்கிறோம். ஒவ்வொரு ஸ்வரமும் ஓர் சிறப்பான ரஸபாவத்திற்கு உரியதாக அமைந்திருக்கிறது. அந்த ரஸபாவத்தைப் பொறுத்த வரையில் அதை வாதி அல்லது முதலிசை என்று கொள்ளலாம். அதே பிடியில் அதன் சம்வாதியும் அமைந்தால் அந்த ரஸபாவம் பூர்த்தி அடைகிறது. அதற்கு விவாதியான ஸ்வரம் ரஸபாவத்திற்கு உதவியளிக்காததோடல்லாமல் ரஸபங்கமும் செய்யக்கூடியதாகையால் அதைச் சேர்க்காமலோ அல்லது அதைப் பட்டும் படாமலும் உச்சரித்தோ ப்ரயோகிக்கவேண்டும். ஷட்ஜத்திற்கு மத்யமும் பஞ்சமும் சம்வாதிகள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த சம்வாதியைப்பற்றிய

தத்துவம் நமது அனுபவத்திற்கும் ஒத்ததாய் இருப்பதைக் கண்டோம். பொதுவாகவே ஷட்ஜத்திற்கும் மத்யமத்திற்கும் அல்லது ஷட்ஜத்திற்கும் பஞ்சமத்திற்கும் உள்ள இடைவெளியோடு கூடிய எந்த இரண்டு ஸ்வரங்களும் ஒன்றுக்கொன்று சம்வாதி என்ற ஓர் பொது விதியும் சொல்லப்பட்டிருக்கிறது.

### ச்ருதி என்னும் அளவுகோல்

இந்த சம்வாதி சம்பந்தத்திற்கான இடைவெளியை ‘ச்ருதிகள்’ அல்லது ‘அலகுகள்’ என்ற அளவையினாலும் கணக்கிட்டிருக்கிறார்கள். ச்ருதிகளை நாதத்தைப்பற்றிய விஞ்ஞானத்தின் மூலமாகவோ அல்லது வாதிசம்வாதி என்ற உறவை உபயோகப்படுத்தியோ தீர்மானிக்கலாம். பௌதிக தத்துவப்படி ச்ருதிகளை அமைப்பது எப்படியெனில் வெவ்வேறு தந்திகளில் ஒன்றுக்குமேல் ஒன்று சிறிது உயர்ந்து இருக்கக்கூடிய நாதங்களை அவைகள் ஒன்றோடொன்று கலக்காமல் தனித்து ஒலிப்பதற்கான இடைவெளியுடன் அமைக்கவேண்டும். இரண்டு நாதங்கள் மிகவும் நெருங்கியிருக்கும் சமயத்தில் அவை ஒன்றோடொன்று கலந்து மேலும் கீழுமாக அலைபோன்ற ஓர் த்வனி ஏற்படுவதை நாம் கவனித்திருக்கிறோம். இதையே ஆங்கில பௌதிக விஞ்ஞானிகள் Beats என்று அழைக்கிறார்கள். இவை உண்டாகாமல் இருப்பதற்கு இரண்டு நாதங்களுக்கிடையே குறைந்த பக்ஷமாக ஓர் இடைவெளி அவசியம்[1]. இவ்வித இடைவெளியிருக்கும்படியாக நாதங்களை வரிசை

1. இவ்விதமாக ச்ருதியை அமைக்கும் முறை சங்கீத ரத்னாகரம் என்னும் நூலில் ச்ருதி வீணை என்பதைப்பற்றிய பகுதியில் அதாவது முதல் அத்தியாயம் 2வது ப்ரகரணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ச்ருதி வீணை அமைப்பதற்கு 22 தந்திகளில் ஒன்றுக்கு மேல் ஒன்று உயர்ந்திருக்கக்கூடிய 22 நாதங்களை அமைக்க வேண்டும். “அடுத்தடுத்த நாதங்கள் என்பதை விளக்கும்போது அந்த நூலில் “அடுத்தடுத்ததென்றால் இரண்டு நாதங்களுக்கிடையே மூன்றாவது நாதம் தனிந்து ஒலிக்கக்கூடியதாக இருக்கக்கூடாது,” என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்குப் பொருள் கொள்ளவேண்டுமானால் “ஒலிக்கக்கூடாது” என்பதற்குப் ‘பக்கத்திலுள்ள நாதங்களோடு சேர்வதனால் தனித்து இயங்கக்கூடாது” என்று பொருள் கொண்டாலொழிய அந்த வாக்கியத்திற்கே அர்த்தமில்லாமல் போய்விடுகிறது.

யாக அமைத்தால் ஒரு ஸ்தாயி (octave)யில் 22 தனித்த நாதங்கள்தான் உண்டாகமுடியும். இவைகளையே நாம் ச்ருதி கள் அல்லது அலகுகள் என்கிறோம். அடுத்தடுத்த ச்ருதி களுக்கு இடையேயுள்ள இடைவெளியே நமக்கு ஓர் அளவு கோலாக உபயோகப்படுகிறது. இதே ச்ருதிகளை சம்வாதி என்ற உறவை உபயோகப்படுத்தியும் நிச்சயம் செய்யலாம். அது எவ்வாறெனில் ஓர் ஸ்வரத்தை எடுத்துக்கொண்டு அதற்கான இரண்டு சம்வாதிகளையும் முதலில் கண்டுபிடிக்க வேண்டும். அதாவது ஆரம்பித்த ஸ்வரத்திலிருந்து ஷட்ஜ மத்யமம், ஷட்ஜபஞ்சமம் இந்த இடைவெளிகளுக்கு அப்பா லுள்ள ஸ்வரங்களைக்கொண்டு கண்டுபிடிக்கவேண்டும். பிறகு இந்த இரண்டாவதாகக் கிடைத்த சம்வாதிகளின் சம்வாதிகளையும் அப்படியே 3வது, 4வது, 5வது, 6வது என்று தொடர்ந்தாற்போல் சம்வாதி வரிசைகளைக் கண்டு பிடிக்கவேண்டும். இப்படிக் கண்டுபிடித்துக்கொண்டு போனால் ஆரம்பித்த ஸ்வரத்தின் ஸ்தானத்தையும் சேர்த்து ஒரு ஸ்தாயிக்குள் 22 ஸ்வரஸ்தானங்களே நமக்குக் கிடைக் கும். அதற்குமேல் சம்வாதிகளைக் கண்டுபிடிக்க ஆரம்பித் தால் பழைய ஸ்தானங்களே மறுபடியும் வரும். பௌதிக முறையில் கண்டுபிடிக்கப்பட்ட 22 ச்ருதிகளும் வாதி சம்வாதி முறையைக்கொண்டு கண்டுபிடிக்கப்பட்ட 22 ச்ருதி களும் ஒன்றே என்பதையும் கண்டுகொள்ளலாம். இவ்வித ச்ருதிகளுள் இரண்டு ச்ருதிகளுக்குள்ள இடைவெளியையே நாம் ஸ்வரங்களை அளக்கக்கூடிய அளவுகோலாக நமது பழைய நூல்கள் ஏற்படுத்தியிருக்கின்றன. இந்த அளவு கோல் நமது மஹரிஷிகளால் சங்கீதக் கலைக்கு அளிக்கப் பட்ட ஓர் பெரிய விஞ்ஞான நன்கொடையாகும்.

இந்த அளவுகோலின்படி ஷட்ஜத்திற்கும், மத்யமத் திற்கும் 9 ச்ருதி இடைவெளியிருக்கிறது என்றும், ஷட்ஜத் திற்கும் பஞ்சமத்திற்கும் இடையே 13 ச்ருதி இடைவெளி இருக்கிறது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. பொது வாகவே 9 ச்ருதி அல்லது 13 ச்ருதி இடைவெளியுள்ள இரண்டு ஸ்வரங்கள் ஒன்றுக்கொன்று சம்வாதிகள். எந்த ஸ்வரத்திலிருந்து ஆரம்பித்தாலும் சம்வாதி வரிசையில் உள்ள ஸ்வரங்கள் முதல் சம்வாதிக்கு 9 அல்லது 13 ச்ருதி களுக்கு அப்பால் கிடைக்கும். அவற்றின் சம்வாதிகளான இரண்டாவது சம்வாதிகள் ஆரம்பித்த ஸ்வரத்திலிருந்து

18 அல்லது 4 ச்ருதிகளுக்கு அப்பால் இருக்கும். மூன்ருவது வரிசை சம்வாதிகள் 5 அல்லது 17 ச்ருதிகளுக்கு அப்பால் கிடைக்கின்றன. நான்கர்வது வரிசை 14 அல்லது 8 ச்ருதிகளுக்கு அப்பாலும், 5வது வரிசை 1 அல்லது 21 ச்ருதிகளுக்கு அப்பாலும், 6வது வரிசை 10 அல்லது 12 ச்ருதிகளுக்கு அப்பாலும், 7வது வரிசை 19 அல்லது 3 ச்ருதிகளுக்கு அப்பாலும், 8வது வரிசை 6 அல்லது 16 ச்ருதிகளுக்கு அப்பாலும், 9வது வரிசை 15 அல்லது 7 ச்ருதிகளுக்கு அப்பாலும் 10வது வரிசை 2 அல்லது 20 ச்ருதிகளுக்கு அப்பாலும், 11வது வரிசை 11 ச்ருதிகளுக்கு அப்பாலும் கிடைக்கின்றன. நெருங்கிய சம்வாதிகள் பிடிகளில் இருப்பதனுல் அந்தப் பிடிகளின் ரக்திக்குக் காரணமாகின்றன. நாம் ஷட்ஜத்திலிருந்து ஆரம்பித்து ஷட்ஜத்தின் ஸ்தானத்தை 4வது ச்ருதி என்று வைத்துக்கொண்டால்[2] சம்வாதி வரிசைகளின் ஸ்தானங்கள் அடியிற்கண்டபடி அமையும்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 13வது | 8வது | 9வது | 18வது | 5வது | |
| 4வது | — | — | — | — | — | |
| | 17வது | 22வது | 21வது | 12வது | 3வது | |
| | 14வது | 1வது | 10வது | 19வது | 6வது | |
| | — | — | — | — | — | 15வது |
| | 16வது | 7வது | 20வது | 11வது | 2வது | |

இந்த ஸ்வர ஸ்தானங்களில் உண்டாகும் ஸ்வரங்களுக்கு அடியிற்கண்டபடி பெயர்கள் வழுங்கப்படுகிறது.

| | |
|---|---|
| முதல் வரிசை — | மத்யமம்<br>பஞ்சமம் |
| 2வது வரிசை — | சதுச்ருதி ரிஷபம்.<br>சுத்த நிஷாதம் (அல்லது பஞ்ச ச்ருதி தைவதம்) |
| 3வது வரிசை — | சுத்த காந்தாரம் (அல்லது பஞ்ச ச்ருதி ரிஷபம்)<br>சதுச்ருதி தைவதம் |
| 4வது வரிசை — | பெயர் இல்லை<br>அந்தரகாந்தாரம் |

2. ஷட்ஜத்தின் ஸ்வர ஸ்தானத்தை 4வது ச்ருதி என்று வைத்துக்கொள்வதன் காரணம் பிந்திய பகுதிகளில் விளங்கும்,

5வது வரிசை — பெயர் இல்லை
காகலி நிஷாதம்

6வது வரிசை — பெயர் இல்லை
ப்ரதி மத்யமம்

7வது வரிசை — கைசிகி நிஷதம்
சுத்த ரிஷபம்

8வது வரிசை — சாதாரண காந்தாரம்
சுத்த தைவதம்

9வது வரிசை — பெயர் இல்லை
பழைய அந்தரகாந்தாரம். இப்பொழுது சாதாரண காந்தாரம் என்ற பெயரில் இணைக்கப்பட்டுள்ளது

10வது வரிசை — பெயர் இல்லை
பழைய காகலி நிஷாதம். இப்பொழுது கைசிகி நிஷாதம் என்ற பெயரோடு இணைக்கப்பட்டுள்ளது.

11வது வரிசை — பெயர் இல்லை

## ஸ்வரமும் ஸ்வரஸ்தானமும்

மேலே ஸ்வரஸ்தானம் என்ற வார்த்தை உபயோகப் படுத்தப்பட்டிருப்பதில் ஒரு விசேஷம் இருக்கிறது. நமது சங்கீத சாஸ்திரப்படி ஸ்வரங்கள் ஒன்றுக்கு மேற்பட்ட ச்ருதிகளால் உண்டாக்கப்படுகின்றன. ச்ருதி என்பது ஏற்றத்தாழ்வு இல்லாத ஒரு சிறிய நாதப்பகுதி. அதை ஆங்கிலத்தில் Pitch என்று சொல்லுகிறோம். ஆனால் ஸ்வரம் என்பது பல ச்ருதிகளால் உண்டாகின்றன. இப்படி ச்ருதி, ஸ்வரம் என்ற இரண்டுக்குமுள்ள வித்தியாசத்தை நாம் தெளிவாக மனதில் வாங்கிக்கொள்ளவேண்டும். ச்ருதி, ஸ்வரம் என்ற இரண்டு வார்த்தைகள் ஏற்பட்டிருப்பதைக்கொண்டே அவை இரண்டும் வெவ்வேறாக இருக்கவேண்டும் என்பது தெளிவு. ஆகையால் அவை இரண்டையும் ஒன்றாக நினைப்பது சரியல்ல.

4 ச்ருதிகள் ஷட்ஜத்திற்கு உரியன என்று சொல்லப் பட்டிருக்கிறது. ரிஷபத்திற்கு 3 ச்ருதிகளும், காந்தாரத்

திற்கு 2 ச்ருதிகளும், மத்யமத்திற்கு 4 ச்ருதிகளும் அதே வரிசையாக ப, த, நி, ஸ என்ற ஸ்வரங்களுக்கு முறையே 4, 3, 2, 4 ச்ருதிகளும் உரியன. ஷட்ஜத்திற்கு 4 ச்ருதிகள் இருக்கின்றன என்பதற்கு 4 ச்ருதிகளிலும் 4 ஷட்ஜஸ்வரங்கள் ஏற்படுகின்றன என்று சொல்லமுடியாது. ஏனெனில் அவ்விதம் பொருள் கொள்வோமானால் 22 ச்ருதிகளும், 22 ஸ்வரங்களாகக் கருதப்படவேண்டும். ஆனால் நமது சங்கீத சாஸ்திரத்தைப்பற்றிய எந்த நூலிலும் 22 ஸ்வரங்களைப் பற்றி பிரஸ்தாபிக்கப்படவில்லை. ஆகையால் நாம் வேறு வகையில் அதற்குப் பொருள் சொல்லவேண்டும். ஷட்ஜத்தில் 4 ச்ருதிகள் அடங்கியிருக்கின்றன என்பதைத் தவிர வேறு வகையில் நாம் பொருள் கொள்ளமுடியாது. அதாவது நாம் ஷட்ஜஸ்வரத்தை உச்சரிக்கும்போது 4 ச்ருதிகளும் ஒலித்துவிடுகின்றன. அவை ஒன்றன்பின் ஒன்றாக ஒலிக்கின்றன என்று சொல்லலாம். இதேவகையில் மற்ற ஸ்வரங்களிலும் அவற்றிற்குரிய ச்ருதிகள் ஒலிக்கின்றன. இவ்விதம் நாம் பொருள் கொள்வதற்கு ஆதாரமாக நாட்டிய சாஸ்திரத்தில் குழல் வாசிக்கும் முறையைப்பற்றிய 30வது அத்தியாயத்தில் நான்கு ச்ருதி ஸ்வரங்கள், 3 ச்ருதி ஸ்வரங்கள், 2 ச்ருதி ஸ்வரங்கள் இவைகளை உண்டாக்கும் முறை விவரிக்கப்பட்டிருக்கிறது. ஒரு ஸ்வரத்திற்குள்ள த்வாரம் முழுவதும் திறக்கப்படுமானால் 4 ச்ருதி ஸ்வரங்கள் உண்டாகின்றன என்றும், அது பாதி மூடப்பட்டால் 2 ச்ருதி ஸ்வரங்கள் உண்டாகின்றன என்றும் அதை வேகமாக மூடி மூடித் திறந்தால் 3 ச்ருதி ஸ்வரங்கள் உண்டாகின்றன என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ஸ்வரங்கள் ஒவ்வொன்றிலும் ஒன்றுக்கு மேற்பட்ட ச்ருதிகள் இருக்கின்றன என்பது தெளிவு. இருந்தாலும் நமது அனுபவத்தில் ஒவ்வொரு ஸ்வரத்தையும் அதற்குரியதென ஒரு ச்ருதியோடு நமது காது சம்பந்தப்படுத்துகிறது. அந்த ச்ருதி அந்த ஸ்வரத்தின் முக்கியமான ச்ருதி அதாவது நமது காதில் அதிகமாகத் தங்குகிற ச்ருதி என்று கொள்ளவேண்டும். ஒவ்வொரு ஸ்வரத்திலும் ச்ருதிகள் எந்த வரிசையில் ஒலிக்கின்றன என்பதைப்பற்றி நமது நூல்கள் ஒன்றிலும் தெளிவாகச் சொல்லப்படவில்லை. இதைப்பற்றி நாம் ஓர் ஹேஷ்யம் செய்யலாம் ஸ்வரத்திற்குரிய ச்ருதிகள் ஒன்றி

லிருந்து ஆரம்பித்து வரிசையாக ஒவ்வொரு ச்ருதியிலும் சஞ்சாரம் செய்து பிறகு ஆரம்பித்த ச்ருதிக்கே ஸ்வரம் வந்து சேருகிறது என்று கொள்ளலாம். இவ்வித சக்கர வடிவத்தில் ஒரே முறைதான் சஞ்சரிக்கிறது என்று கொள்ளலாம். பலமுறை சஞ்சரிக்கிறது என்றும் சொல்ல லாம். பொதுவாக ஆரம்பிக்கும் ச்ருதியும், முடிக்கும் ச்ருதி யும் ஒன்ருகவே இருக்கும். இந்த ச்ருதியே ஸ்வரஸ்தானம் அல்லது ஸ்வரத்தின் முக்கிய ச்ருதியாகும். ஸ்வரங்களுக் குள்ள இடைவெளியை ஸ்வரஸ்தானங்களுக்குள்ள இடை வெளியைக்கொண்டு நிச்சயிக்கிருேம்.

### ஸ்வரஸ்தானங்களைக் கண்டுபிடிக்கும் வழி

ராகங்களில் ப்ரயோகிக்கும் ஸ்வரங்களின் ஸ்தானங் களை அவற்றுள் நாம நிச்சயமாக அறிந்த ஸ்வரங்களின் ஸ்தானங்களை வைத்துக்கொண்டு அவற்றின் சம்வாதி ஸ்வ ரங்களின் ஸ்தானங்களைக் கண்டுபிடிப்பதன் மூலம் அறிய லாம். உதாரணமாக ஒரு ராகத்தில் ரிஷபம் பஞ்சமத்திற்கு சம்வாதியாக அமைந்திருந்தால் அதாவது 'ரி க ம பா' என்று சங்கராபரணத்தில் அமைந்திருப்பதுபோலவும், ப ம ரீ என்று மத்யமாவதியில் அமைந்திருப்பதுபோலவும் இருந்தால் அந்த ரிஷபத்தின் ஸ்வரஸ்தானம் பஞ்சமத்தின் ஸ்வரஸ்தானத்திற்கு 9 ச்ருதிகள் கீழே என்று நிச்சயிக்க லாம். பஞ்மஸ்வரத்தின் ஸ்தானம் 17வது ச்ருதி என்பது நாம் நிச்சயமாக அறிந்த விஷயம். ஆகையால் இந்த ரிஷ பத்தின் ஸ்தானம் 8வது ச்ருதி என்பது தெளிவு. இதை சது ச்ருதி ரிஷபம் என்று நாம் அழைப்பது பொருந்தும். ஒரு ராகத்தில் சுத்த தைவதத்திற்கு சம்வாதியாகக் காந்தாரம் அமைந்திருந்தால் (இதைத் தோடியில் காணலாம்), அந்த காந்தாரத்தின் ஸ்தானம் சுத்த தைவதத்தின் ஸ்தானத் திற்கு 9 ச்ருதி கீழே என்று நிச்சயிக்கலாம். சுத்த தைவ தத்தின் ஸ்தானம் 20-வது ச்ருதி என்பது நாம் அறிந்தது. ஆகையால் இந்த காந்தாரத்தின் ஸ்தானம் 11-வது ச்ருதி யில் இருக்கும். 10-வது ச்ருதியில் ஸ்தானத்தையுடைய ஸ்வரத்தை சாதாரண காந்தாரம் என்று நாம் சொல்லு கிருேம். தோடி காந்தாரத்தை சாதாரண காந்தாரம் என் றும் அழைக்கிருேம். 11-வது ச்ருதியில் ஸ்தானத்தை

இப்படிப் பட்ட காந்தாரத்தின் மற்றொரு சம்வாதியான நிஷாதம் (சங்கராபரணம், கல்யாணி ராகங்களில் இதைக் காணலாம்) 25வது அதாவது 3வது ச்ருதியில் ஸ்தானத்தை யுடைய தற்கால காகலிநிஷாதம். இந்த நிஷாதத்திற்கு மத்யமம் சம்வாதியானால் (கல்யாணி, பூர்விகல்யாணி ராகங் களில் இதைக் காணலாம்) அந்த மத்யமத்தின் ஸ்தானம் இதற்கு 9 ச்ருதியின் கீழே உள்ள 16வது ச்ருதி என்பது நிச்சயம். அதாவது இந்த மத்யமம் ப்ரதி மத்யமம் ஆகும். ப்ரதி மத்யமத்தின் ஸ்தானம் இன்னொரு வகையிலும் ஊர் ஜிதமாகிறது. பூர்வி கல்யாணி ராகத்தில் ப்ரதி மத்ய மத்திற்கு சுத்தரிஷபம் சம்வாதியாக அமைந்திருக்கிறது. சுத்த ரிஷபத்தின் ஸ்தானம் 7வது ச்ருதி என்பது நாம் அறிந்தது. ஆகையால் ப்ரதி மத்யமத்தின் ஸ்தானம் அதற்கு 9 ச்ருதி மேலே உள்ள 16வது ச்ருதி என்பது நிச்சயப்படுகிறது.

தோடி காந்தாரத்தின் ஸ்தானத்தைப்பற்றி ஏற் கனவே சொன்னோம். அந்த காந்தாரத்திற்கு சம்வாதி

யான நிஷாதத்தின் ஸ்தானம் 11-வது ச்ருதிக்கு 13 ச்ருதி அப்பாலுள்ள 24-வது அதாவது 2-வது ச்ருதி என்று நிச்சயப்படுகிறது. சில ராகங்களில் ரிஷபம் சுத்த ரிஷபத்திற்கு உயர்ந்து இருந்தபோதிலும் பஞ்சமத்திற்கு சம்வாதியாக அமையவில்லை. இதற்கு உதாரணம் பைரவி ராகம். பைரவி ராகத்தில் 'ரிகமபா' என்ற பிடி பேசுவதில்லை. 'ரிகமபதா' என்ற பிடியே காணப்படுகிறது. 'ரிகமபா' என்று பிடித்தால் நம்மையறியாமல் உசேனி ராகம் பேசுகிறது. பைரவி ராகத்தின் ரிஷபம் 8-வது ச்ருதியில் ஸ்தானத்தையுடைய சதுச்ருதி ரிஷபம் இல்லை என்பது தெளிவு. ஆகையால் இதன் ஸ்தானம் 9-வது ச்ருதி என்று நிச்சயித்து இதை பஞ்ச ச்ருதி ரிஷபம் என்று சொல்லவேண்டும். இந்த ரிஷபத்திற்கு சம்வாதியாக வருகிற தைவதம் பஞ்ச ச்ருதி தைவதமே. அதன் ஸ்தானம் 22-வது ச்ருதி. பைரவியில் ரிஷபத்தில் ஆரம்பித்து ஷட்ஜத்தில் முடிகிற மூர்ச்சனையில்தான் இந்த தைவதம் பேசுகிறது. அதே ராகத்தில் ஷட்ஜத்தில் ஆரம்பித்து நிஷாதத்தில் முடிகிற மூர்ச்சனையில் சுத்த தைவதம் பேசுகிறது. இதன் காரணம் மூர்ச்சனையைப்பற்றிய விவரத்தில் கண்டுகொள்ளலாம்.

இவ்வாறாக சம்வாதி சம்பந்தத்தைக்கொண்டு ஐயந்திரிபற ராகங்களில் பேசும் ஸ்வரங்களின் ஸ்தானங்களை நிச்சயிக்கலாம். காதைக் கொண்டோ அல்லது வீணை முதலிய வாத்தியங்களைக்கொண்டோ தீர்மானிப்பதில் அவ்வளவு நிச்சயம் ஏற்படுவதில்லை. வாத்தியங்களில் ஸ்வரங்களை வாசிக்கும்போது தந்திகளில் அழுத்தம் கொடுப்பதினால் ஸ்வரங்களின் நிஜஸ்வரூபம் நிதரிசனமாக நமக்கு விளங்காமற் போகிறது.

தற்காலத்திய 72 மேளகர்த்தா என்ற ஏற்பாட்டில் 16 ஸ்வரங்கள் ப்ரயோகத்திலிருப்பதாகத் தீர்மானித்து அவற்றின் ஸ்தானங்களை ஒருவாறு நிச்சயித்திருக்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| ஷட்ஜம் | — | 4வது ச்ருதி |
| சுத்தரிஷபம் | — | 7வது ச்ருதி |
| சதுச்ருதி ரிஷபம் | — | 8வது ச்ருதி |
| பஞ்சச்ருதிரிஷபம் / சுத்தகாந்தாரம் | } | 9வது ச்ருதி |

| | | |
|---|---|---|
| ஷட்ச்ருதி ரிஷபம்<br>சாதாரண காந்தாரம் | } | 10வது ச்ருதி |
| அந்தரகாந்தாரம் | — | 12வது ச்ருதி |
| சுத்தமத்யமம் | — | 13வது ச்ருதி |
| ப்ரதி மத்யமம் | — | 16வது ச்ருதி |
| பஞ்சமம் | — | 17வது ச்ருதி |
| சுத்த தைவதம் | — | 20வது ச்ருதி |
| சதுச்ருதி தைவதம் | — | 21வது ச்ருதி |
| பஞ்சச்ருதி தைவதம்<br>சுத்த நிஷாதம் | } | 22வது ச்ருதி |
| ஷட்ச்ருதி தைவதம்<br>கைசிகீ நிஷாதம் | } | 1வது ச்ருதி |
| காகலீ நிஷாதம் | — | 3வது ச்ருதி |

இப்படி 18 ஸ்வரங்கள் இருப்பதாக ஒப்புக்கொண்டாலும் 72 மேளகர்த்தா என்ற கணக்கைத் தீர்மானிப்பதில் 16 ஸ்வரங்களே கணக்கில் சேர்த்துக்கொண்டிருக்கின்றனர். சதுச்ருதி ரிஷபம் பஞ்சச்ருதி ரிஷபம் இரண்டும் ஒரே ஸ்வரமாக கணக்கிடப்பட்டிருக்கிறது. அதேவிதமாக பஞ்சச்ருதி தைவதம், சதுச்ருதி தைவதம் இரண்டும் ஒரே ஸ்வரமாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. மேலே விவரித்திருக்கிறபடி 11வது ச்ருதியில் பேசுகிற காந்தாரத்தையும் 10வது ச்ருதியில் பேசுகிற காந்தாரத்தையும் சாதாரண காந்தாரம் என்ற பெயருடன் ஒரே ஸ்வரமாகவும் 1வது ச்ருதியிலும் இரண்டாவது ச்ருதியிலும் பேசுகிற நிஷாதங்களை கைசிகீ நிஷாதம் என்ற பெயரால் ஒரே ஸ்வரமாகவும் கணக்கிட்டிருக்கிறார்கள். இவ்விதமாக நமது ராகங்களில் ப்ரயோகிக்கப்படும் ஸ்வரங்கள் 20 ஆகிறது. இவைகளை வரிசைப் படுத்தினல் $2 \times 10 \times 10$ அதாவது 200 மேளங்கள் ஏற்படும். இப்பொழுதுள்ளபடி $2 \times 6 \times 6$ அதாவது 72 மேளங்கள் மட்டும் போதாது.

### ராகச்சாயை

ஸ்வரங்களின் ஸ்தானங்களைக் கண்டுபிடிக்கும் வழியை நாம் தெரிந்துகொண்டோம். இனி ஒரு ராகச்சாயையை உண்டாக்கும் விதம் எப்படி? ஒரே சாயையுள்ள பலபிடி

களைக் கற்பனை செய்து ராகத்தை எப்படி விஸ்தரிப்பது என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். இதைப் பற்றிய விவரம் தற்காலத்தில் வழங்கிவரும் சங்கீத லக்ஷணங்களில் காணப்படவில்லை. நமது புராதன நூலாசிரியர்களான பரதர், மதங்கர், தத்திலர் முதலியவர்களின் நூல்களி லிருந்து இந்த ரகசியத்தை நாம் தெரிந்துகொள்ள வேண்டி யிருக்கிறது. ராகச்சாயை என்றால் ஒரே வகையான ஹ்ருதய உணர்ச்சியை எழுப்பி ஒரேவகையான ரஸபாவத் தைப் போஷிக்கக்கூடிய சக்தி என்று சொல்லலாம். இவ் விதம் ரஸபாவத்தைப் போஷிக்க வேண்டுமானல் பிடிகளில் பூர்ணமான ரக்தி இருக்கவேண்டும். பூர்ணமான ரக்தியை உண்டாக்கும் வழியை சம்வாதியைப்பற்றி விவரித்தபோது நாம் அறிந்து கொண்டோம். அதே வழியில்தான் ரஸபாவங்களைப் போஷிக்கக்கூடிய பிடிகளைக் கற்பனை செய்யமுடியும். இந்தக் காரணத்தைக் கொண்டே ஸ்வரங் கள் ஒன்றுக்கொன்று உள்ள நெருங்கிய சம்பந்தமாகிய சம்வாதி முதலிய தத்துவத்திற்கே நமது நூல்களில் முத லிடம் கொடுத்திருக்கிறார்கள். ஸ்வரங்களின் நெருங்கிய உறவைக் கொண்டு அவைகளை சம்வாதிகள், விவாதிகள், அனுவாதிகள் என மூன்றுவகையாகப் பிரித்திருக்கிறார்கள். 9 அல்லது 13 ச்ருதிகளுக்கு அப்பாலுள்ள ஸ்வரங்கள் சம் வாதிகள் என்பது நமக்குத்தெரியும். சம்வாதி வரிசையில் அநேகமாகக் கடைசியில் உள்ள 2 அல்லது 20 ச்ருதிகளுக்கு அப்பாலுள்ள ஸ்வரங்களுக்கு விவாதிகள் எனப் பெயரிடப் பட்டிருக்கிறது. சம்வாதி வரிசையில் உள்ள ஸ்வரங்கள் வரவர உறவின் நெருக்கம் குறைந்து வந்து கடைசியில் உள்ள ஸ்வரங்கள் உறவற்று பகைமை ஸ்வரங்களாகவே கருதப்படுகின்றன. சம்வாதி வரிசையில் சம்வாதிகளுக்கும் விவாதிகளுக்கும் இடையேயுள்ள ஸ்வரங்களுக்கு அனு வாதிகள் என்று பெயர். சம்வாதி என்கிற வார்த்தை பொருள் செறிந்தது. எதை ராகச்சாயைக்கு ஆதாரமான முதல் ஸ்வரமாக எடுத்துக் கொண்டிருக்கிறோமோ அதற்கு வாதி என்று பெயர். வாதி என்றால் பேசுபவன்' என்று அர்த்தம். அந்த ஸ்வரத்தில் ஓர் ரஸபாவம் பேசப்படு வதால் அதற்கு வாதி என்றுபெயர். அந்த ரஸபாவத்தைப் பூர்த்தி செய்விப்பதனல் 'நன்றாய்ப் பேசுவது' என்ற பொருள்பட அதைச் சம்வாதி என்கிறோம்.

## மூர்ச்சனை

ராகங்களில் பூர்ண ரக்தியுள்ள ஒவ்வொரு பிடியிலும் வாதி சம்வாதிகள் முதலிலாவது கடைசியிலாவது அமையும். முதலில் நாம் கேட்கும் ஒலியும் கடைசியில் நாம் கேட்கும் ஒலியும் நமது மனதில் நன்ருகப் பதிகிறது. அந்தப் பிடி முழுவதையும் அதன் சாயைக்கு மாற்றிவிடுகிறது. இப்போது ராகச் சாயையுள்ள ஒரு பிடியைக் கற்பனை செய்யும் முறையைத் தீர்மானித்தோம். அடுத்தபடியாக நாம் கண்டு பிடிக்க வேண்டியது அவ்வளவு சுலபமல்ல. என்னவெனில் ஒரே ராகச் சாயையுள்ள ரஸபாவத்தைப் போஷிக்கக் கூடியதான நூற்றுக் கணக்கான பிடிகளை எப்படிப் பிடிப்பது என்பதே. ஏனெனில் ராகம் என்பதே அவ்விதப் பிடிகளின் தொகுதியேயாகும். ஒரேவகையான ரஸபாவமுள்ள எண்ணிறந்த பிடிகளைக் கற்பனை செய்வதென்பதே நம்நாட்டு சங்கீதத்தின் தனிப்பெருமை. ராகம் என்பதே அதன் தனிச்சிறப்பு. இதற்கான உபாயம் ஒவ்வொரு பிடியிலும் அதில் எவ்வளவு ஸ்வரங்கள் இருந்தபோதிலும் அதன் முதல் ஸ்வரமும் கடைசி ஸ்வரமும அந்தப் பிடியின் ரஸபாவத்தை நிச்சயிக்கிறது என்கிற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. அதாவது ஏழு ஸ்வரங்களில் ஒவ்வொன்றிலிருந்தும் ஆரம்பித்து 7 ராகச் சாயைகளை உண்டாக்கலாம்.

இப்போது ஸ்வரங்களுக்கும் ரஸபாவங்களுக்கும் உள்ள சம்பந்தத்தை நாம் தெரிந்து கொள்ளவேண்டும். நமது சங்கீத நூல்களில் நூலாசிரியர்களான மஹரிஷிகள் ஒவ்வொரு ஸ்வரமும் எந்த ரஸபாவத்திற்குரியது என்பதை மிகவும் தெளிவாகவும் சந்தேகத்திற்கிடமில்லாமலும் நிச்சயித்திருக்கிருர்கள். ஷட்ஜமும், ரிஷபமும் வீரரஸத்திற்குரியது. காந்தாரமும், நிஷாதமும் கருணரஸத்திற்குரியது மத்யமமும் பஞ்சமமும் ச்ருங்கார ரஸத்திற்குரியது. தைவதம் பீபத்ஸம் (அருவருப்பு) பயாநகம் ஆகியரஸங்களுக்குரியது. இவ்வாருக நமக்கு வேண்டிய ரஸத்திற்கான ஸ்வரதை முதலில் வைத்து நாம் ராகச்சாயைகளை உண்டாக்கலாம். ஆனல் பல பிடிகளை இதே ரஸபாவத்தில் பிடிப்பதற்கு இதேதத்துவத்தின் அடிப்படையில் ஓர் விசேஷமான உபாயம் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

அதன் பெயர் மூர்ச்சனை. தமிழிசை நூல்களில் அதைப் 'பாலை' என்று சொல்லுகிறார்கள். ஓர் ஸ்வரத்தில் ஆரம்பித்து அதன் ஏழாவது ஸ்வரம் வரையில் ஏறிப் பிறகு ஆரம்பித்த ஸ்வரத்திற்கு இறங்குவதற்குப் பாலை என்று பெயர். இதன் சஞ்சாரம் சக்கரவடிவமாக அமையும். ஒவ்வொரு ஸ்வரத்திலிருந்தும் மூர்ச்சனையை ஆரம்பிக்கலாமாகையால் ஏழு ஸ்வரங்களுக்கும் ஏழு மூர்ச்சனைகள் ஏற்படுகிறது. ஒவ்வொரு மூர்ச்சனையிலும் ஓர் வேறுபட்ட ராகச் சாயை உண்டாகிறது. இந்த மூர்ச்சனைச் சக்கரத்தில் எங்கே சஞ்சாரம் செய்தாலும் அந்த மூர்ச்சனைக்கான ராகச் சாயை அதாவது ரஸபாவம் அதில் த்வனிக்கும்

## க்ரம சஞ்சாரம்

ஏழு மூர்ச்சனைகளையும் இதன் அடியில் கண்ட ஏழு சக்கரங்களாக எழுதலாம்.




இப்பொழுது இந்த ஏழு சக்கரங்களையும் கவனித்தால் அதில் ஒவ்வொன்றிலும் 12 ஸ்வரங்கள் இடம் பெற்றிருக்கின்றன. இப்பொழுது இன்னொரு கேள்வி பிறக்கலாம். என்னவெனில், ஏதாவதொரு சக்கரத்தை எடுத்துக் கொண்டால் அதில் சஞ்சாரம் செய்யும்போது அதிலுள்ள 12 ஸ்வரங்களில் ஒவ்வொன்றிலும் ஆரம்பித்து இந்தச் சக்கரத்தைப் பூர்த்தி செய்யலாமல்லவா? இப்படி ஒவ்வொரு மூர்ச்சனையிலும் 12 சஞ்சாரங்கள் ஏற்படலாம். ஒவ்வொரு சஞ்சாரமும் வெவ்வேறு சஞ்சாரங்களில் ஆரம்பிப்பதனால்

அந்த சஞ்சாரத்தின் ரஸபாவம் ஆரம்பிக்கும் ஸ்வரத்தைப் பொறுத்து மாறுபடுமே. இப்பொழுது ஒவ்வொரு சஞ்சாரத்திலும் ஏற்படக்கூடிய ரஸபாவமும் மூர்ச்சனையின் ரஸபாவத்திலிருந்து மாறுபடுமாகையால் சஞ்சாரங்களில் எந்த ரஸபாவம் உண்டாகும்? மூர்ச்சனையினுடையதா அல்லது சஞ்சாரங்களினுடையதா? என்ற கேள்வி பிறக்கும். இதற்கான விடையை நாம் புரிந்துகொள்ள வேண்டுமானுல் ரஸபாவங்களின் உற்பத்தி, அவற்றின் பிரிவினை இவைகளைப்பற்றிய அலங்கார சாஸ்திரத்தின் ஓர் முக்கியமான தத்துவத்தை நாம் தெரிந்துகொள்ளவேண்டும். ஓர் நாடகத்திலோ, ஓர் காவியத்திலோ, ஒரு பாட்டிலோ, ஓர் சந்தர்ப்பம் சித்தரிக்கப்படும்போது அது அதன் பொதுவான சந்தர்ப்பத்திற்குரிய முக்கிய ரஸத்தை ஆதாரமாகக் கொண்டு அந்தந்த நிகழ்ச்சிகளில் ஒவ்வொரு உபரஸம் ப்ரகாசத்தை அடைகிறது. உதாரணமாக ச்ருங்கார ரஸத்தை எடுத்துக்கொள்வோம். காதலர்கள் பிரியும்போது அவர்கள் விரகதாபம் ச்ருங்காரத்தை முக்கிய ரஸமாகக் கொண்ட சந்தர்ப்பத்தின் ஓர் நிகழ்ச்சி எனினும் வெளிப்படுவது இரங்கற்சுவையாகிய கருண ரஸமேயாகும். அதைப் போலவே காதலி காதலனிடம் கோபித்துக்கொள்வது ச்ருங்காரத்தில் ரௌத்ரம். இவ்விதமே ச்ருங்காரத்தை முக்கிய ரஸமாகக்கொண்டு பல உபரஸங்களும் உண்டாகலாம்.

இப்போது மூர்ச்சனையானது முக்கிய ரஸத்தை நிச்சயிக்கிறது. ஒவ்வொரு சஞ்சாரமும் ஓர் உபரஸத்தை உண்டாக்குகிறது. இந்த சஞ்சாரங்களுக்கு க்ரம சஞ்சாரம் என்ற பெயரும் இடப்பட்டிருக்கிறது. இதையே நமது தமிழ் நூல்களில் 'பன்னிரு முறை திரித்தல்' என்று கூறியிருக்கிறார்கள். முக்கிய ரஸம் ச்ருங்காரமாக வைத்துக்கொண்டால் மூர்ச்சனை மத்யமத்தில் ஆரம்பித்து அதன் ஏழாவது ஸ்வரமாகிய காந்தாரத்திற்குச் சென்று பிறகு மத்யமத்திற்குத் திரும்பும். இந்த மூர்ச்சனைச் சக்கரத்தில் விப்ரலம்ப ச்ருங்காரம் என்னும் விரகதாபத்திற்குரிய ராகச் சாயையை உண்டாக்கவேண்டுமானுல் காந்தாரம் அல்லது நிஷாதத்தை ஆரம்பமாகக்கொண்ட க்ரம சஞ்சாரங்களைக் கொண்டு ராகத்தை ஆரம்பிக்கவேண்டும். ச்ருங்காரத்தை

முக்கிய ரஸமாக உடைய எல்லா ராகங்களும் மத்யமத்தி லிருந்து ஆரம்பிக்கும் மூர்ச்சனையில் பிறக்கும். ஆனல் அந்த ராகங்களில் ஒவ்வொன்றும் அதற்குரிய உப ரஸத்தைப் பொறுத்து அதற்குத் தகுந்த ஸ்வரத்தில் ஆரம்பிக்கும் க்ரமசஞ்சாரத்தில் அமையும். அதாவது ஒரே மூர்ச்சனையில் பிறக்கும் ராகங்கள் எல்லாவற்றிலும் பொதுவான சில அம்சங்கள் உண்டு.

## ஜாதிகள்

இதைக்கொண்டுதான் நமது நூல்களில் ஜாதிகள் என்னும் தாய் ராகங்களைப்பற்றிப் பேசப்பட்டிருக்கின்றன. ஜாதிகளிலிருந்து ராகங்கள் பிறக்கும். ஜாதிகளின் பொது அம்சங்களைத் தவிர சிறப்பான சில அம்சங்கள் வேறுபடுவதனல் ராகங்கள் உண்டாகின்றன. சிறப்பான அம்சங்கள் மாறுபாடு அடையாத ஜாதிக்கு சுத்த ஜாதி என்று பெயர். அவைகள் மாறுபாடு அடைந்தவைகளுக்கு விக்ருத ஜாதிகள் என்று பெயர். விக்ருத ஜாதிகளே ராகங்களாகும். சுத்த ஜாதியில் க்ரம சஞ்சாரம் மூர்ச்சனையைப்போலவே அதன் முதல் ஸ்வரத்தில் ஆரம்பிக்கும். விக்ருத ஜாதிகளில் க்ரம சஞ்சாரம் வேறு ஸ்வரங்களில் ஆரம்பிக்கும். ஆகையால் மூர்ச்சனைகள் ஜாதிகளின் சாயைகளை நிச்சயிக்கின்றன. ஒரு ஜாதியினின்று பிறக்கும் பல ராகங்களின் சாயைகளை அதன் மூர்ச்சனையில் செய்யக்கூடிய க்ரம சஞ்சாரங்கள் நிச்சயிக்கும்.

ராகங்களின் லக்ஷணங்களை விவரிக்கும்போது ராகத்தின் அமைப்பில் சில ஸ்வரங்களுக்கு முக்கியத்வம் அளிக்கப்பட்டிருக்கிறது. அவைகளுக்கு ந்யாஸ ஸ்வரங்கள், அம்ச ஸ்வரங்கள், க்ரஹ ஸ்வரங்கள், அபந்யாஸ ஸ்வரங்கள் என்று பெயர்.

ந்யாஸ ஸ்வரம் என்பது ராகம் முடிவடையும் ஸ்வரம். ராகத்தின் இடையிலோ, முடிவிலோ அந்த ஸ்வரத்தை அடைந்ததும் ஓர் பூரண திருப்தி ஏற்பட்டுவிடும். மறுபடியும் ராகத்தில் சஞ்சாரம் செய்யவேண்டுமானல் அதற்காகத் தனியான பிரயத்தனத்தைச் செய்யவேண்டியிருக்கும். இந்த ஸ்வரம் மூர்ச்சனையினல் நிச்சயிக்கப்படுகிறது. ஆகை

யால் பல ராகங்களுக்குப் பிறப்பிடமாகிய ஒவ்வொரு ஜாதிக்கும் மாறுபடாத ஓர் ந்யாஸ ஸ்வரம் ஏற்பட்டிருக்கிறது. சுத்த ஜாதிகளிலும் சரி, விக்ருத ஜாதிகளிலும் சரி இந்த ந்யாஸ ஸ்வரம் மாறுபடாது. விக்ருதி ஜாதிகளாகிய ராகங்கள் ஒவ்வொன்றிற்கும் அதன் தாயாகிய ஜாதியின் ந்யாஸ ஸ்வரமே அமைந்திருக்கும்.

அம்ச ஸ்வரம் என்பது ஒரு ராகத்தின் ரஸபாவத்திற்குக் காரணமாக இருந்து ராகம் முழுவதையும் ரஸ பாவத்தினல் நிறையும்படிச் செய்கிறது. ராகச் சாயையை நாம் ப்ரகாசிக்கச் செய்து காப்பாற்றவேண்டுமானல் இந்த ஸ்வரத்தில் அடிக்கடி வந்து தங்கவேண்டும். ராகமே இந்த ஸ்வரத்தின் அம்சமாகப் பிறப்பதால் அதற்கு அம்சம் என்று பெயர். முக்கிய ரஸம், உபரஸம் இவ்விரண்டும் ஓர் சந்தர்ப்பத்துக்கு உரியதெனினும் உபரஸமே நிகழ்ச்சியிலிருந்து வெளிப்படையாகத் தோன்றக்கூடியது. முக்கிய ரஸம் சந்தர்ப்பத்தைக் கொண்டு நாம் ஊகிக்க வேண்டியதாக இருக்கும். உதாரணமாக விப்ரலம்ப ச்ருங்காரத்தில் இரங்கற்சுவையாகிய கருண ரஸமே ப்ரகாசமாகத் தெரியும். முக்கிய ரஸமாகிய ச்ருங்காரம் என்பது சந்தர்ப்பத்தைக் கொண்டு நாம் ஊகிக்கவேண்டியிருக்கிறது. அதுபோலவே ராகத்தில் முக்கியமான ப்ரகாசத்தை யுடையது அம்ச ஸ்வரமே. முக்கியமான ஸ்தானத்தை வகிப்பதும் அதுவே. அதற்கு நெருங்கிய சம்வாதிகள் அல்லது நெருங்கிய அனுவாதிகளே க்ரஹஸ்வரம், அபந்நியாஸ ஸ்வரங்கள் முதலிய முக்கியமான ஸ்வரங்களாக அமையும்.

க்ரஹஸ்வரம் என்பது ராகத்தை ஆரம்பிக்கும் ஸ்வரம். பெரும்பாலான ராகங்கள் அம்ச ஸ்வரத்திலேயே ஆரம்பிக்கும். அந்த ராகங்களில் அம்ச ஸ்வரமே க்ரஹ ஸ்வரமாக அமைந்துவிடுகிறது. சிற்சில ராகங்களில் அம்ச ஸ்வரத்தில் ஆரம்பிக்காமல் அதற்கு நெருங்கிய அனுவாதியிலோ அல்லது சம்வாதியிலோ ஆரம்பித்து அம்ச ஸ்வரத்திற்குப் போகும். அப்படிப்பட்ட ராகங்களில் அம்ச ஸ்வரம்வேறு. க்ரஹ ஸ்வரம் வேறு. ராகத்தை விஸ்தாரம் செய்யும்போது அம்சஸ்வரத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு சஞ்சாரம் செய்வது போல் அதற்கு நெருங்கிய உறவுள்ள வேறு சில ஸ்வரங்களையும் ஆதாரமாக வைத்துக்கொண்டு சஞ்சாரங்

கள் செய்கிறோம். இவைகளுக்கு அபந்யாஸ ஸ்வரங்கள் என்று பெயர். ராகங்களில் நின்று பாடக்கூடிய ஸ்வரங்களே அபந்யாஸ ஸ்வரங்கள்.

நமது நாட்டில் கலைகளின் சம்பிரதாய பரம்பரை அந்நியர் படையெடுப்பினால் வட இந்தியாவில் 10வது 11வது நூற்றாண்டுகளிலும், தென்னிந்தியாவில் 13வது நூற்றாண்டிலும் சம்பிரதாய பங்கம் ஏற்பட்டது. இதுவரையில் சொல்லப்பட்ட ராக அமைப்பைப்பற்றிய சாஸ்திரம் அந்த இருள் யுகத்தில் மறைந்துபோயிற்று. ஆனால் அந்த லக்ஷணங்களை ஆதாரமாகக் கொண்ட சம்பிரதாயம் குரு சிஷ்ய பரம்பரையினால் அதிர்ஷ்ட வசமாகக் காப்பாற்றப் பட்டு வந்திருக்கிறது. இருள் யுகத்திற்குப் பிறகு சங்கீதக் கலைக்குப் புத்துயிரளித்தவர்கள் ராக அமைப்பைப் பற்றிய பழைய நூல்களைத் புரிந்து கொள்ள முடியவில்லை. எப்படியும் ராகங்களின் உருவங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று தீர்மானித்து ராகங்களிலுள்ள ப்ரக்ருதி விக்ருத ஸ்வரங்களையும் அதன் வரிசையையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்வதற்காகத் தற்காலிகமாக ஓர் விதியை வகுத்துக் கொண்டார்கள். ராகங்களிலுள்ள ப்ரக்ருதி, விக்ருத ஸ்வரங்களை வீணையைக் கொண்டு நிச்சயித்து ஒரே வகையான ஸ்வரங்களுடைய ராகங்களை ஒவ்வொரு தொகுதியாகத் தொகுத்தார்கள். அவைகளுக்கு மேளங்கள் என்ற பெயரையும் கொடுத்தார்கள். இப்போது ராகச்சாயைக்குக் காரணமான மூர்ச்சனைகள், க்ரமசஞ்சாரங்கள் இவைகளில் கவனம் செலுத்தப்படாமல் ராகத்தில் ப்ரயோகிக்கப்படும் ஸ்வரங்களுக்கே ப்ராதான்யம் ஏற்பட்டது. அம்சம், நியாஸம் என்ற லக்ஷணங்கள் மறைந்துபோயின. ராகம் என்றால் ஒரு ஸ்வரத் தொகுதி என்ற எண்ணம் பலமடைய ஆரம்பித்தது. ராகத்திற்குரிய மூர்ச்சனைகளோ அல்லது அவற்றின் எல்லைகளோ கவனிக்கப் படவில்லை. அதனால் ஒரே ஸ்வரத் தொகுதியுள்ளதும் ஆனால் வெவ்வேறு மூர்ச்சனைகளையோ அல்லது க்ரமசஞ்சாரங்களையோ ஆதாரமாகக்கொண்டு உற்பத்தியான ஒன்றுக்கு மேற்பட்ட ராகங்கள் ஒன்றோடொன்று கலந்து பாடப்பட்டன. இவ்விதமான கலப்பு தென்னிந்தியாவிலேயே அதிகமாகக் காணப்படுகிறது. ஏனெனில் வட இந்தியாவில் ராகச்

சாயைக்கு ஆதாரமான வாதி சம்வாதிகளும் 'பகட்' என்றும் பிடிகளும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளப் பட்டிருந்தன. கர்நாடக சம்பிரதாயத்தில் ஒரே ராகத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட மூர்ச்சனைகளை ஆதாரமாக உடைய ஒன்றுக்கு மேற்பட்ட ரஸபாவங்களைப் பிரகாசிக்கச் செய்யும் சாயைகள் கலந்திருக்கின்றன.

## வர்ணங்களும் அலங்காரங்களும்

மூர்ச்சனைகளையும் க்ரமசஞ்சாரங்களையும் கொண்டு ராகத்தின் ஸ்வரூபத்தை நன்றாகக் காப்பாற்றிவிடலாம். ஆயினும் மூர்ச்சனை, க்ரமசஞ்சாரம் தவிர ராகத்திற்கு உயிர்போன்ற சில அம்சங்களும் இருக்கின்றன. இந்த அம்சங்கள் சம்பிரதாயத்தில் குரு சிஷ்ய பரம்பரையினால் மிகவும் ஜாக்கிரதையாகக் காப்பாற்றப்பட்டு வந்திருக்கின்றன. ஆனால் அதே அம்சங்கள் சாஸ்திரத்திலும் ஒரு பகுதியாக இருந்தது இப்போது மறைந்துபோயிற்று. சமீபகாலத்தில் குரு சிஷ்ய சம்பிரதாயம் வரவரக் குறைந்து 12 வருஷத்திற்குக் குறையாமல் இருந்த குருகுல வாசம் 12 மாதங்கள் ஆகி இப்பொழுது 12 வாரங்களாகக் குறைந்து விட்டன. அதனால் சம்பிரதாயத்தினால் காப்பாற்றப்பட்ட உயிர்போன்ற இந்த அம்சங்கள் இப்பொழுது வரவரக் குறைந்து வருகின்றன. அதனால் நமது சாஸ்த்ரீய சங்கீதத்தின் வசீகரணசக்தியும், அனுபவிக்கத் தகுந்த தன்மையும் வரவரக் குறைந்து வருகின்றன. இந்த அம்சங்களுக்கு வர்ணம், அலங்காரம் என்று பெயர். இந்த இரண்டு வார்த்தைகளும் அவற்றிற்கு ஆதியில் ஏற்பட்ட பொருளை இழந்து தற்காலத்தில் முற்றிலும் மாறுபட்ட பொருளில் உபயோகப் பட்டு வருகின்றன. நமது நூல்களில் சொல்லியிருக்கிறபடி 'பாடுதல்' என்ற செயலுக்கு 'வர்ணம்' என்று பெயர்.

**கானக்ரியா வர்ண:** என்பது நூல்களில் உள்ள வசனம். வர்ணம் என்னும் கானக்ரியையை 4 வகையாகப் பிரிக்கலாம். ஸ்வரங்களின் வழியே ஏறுவது, இறங்குவது, ஏற்றம் இறக்கம் இரண்டும் கலந்து சஞ்சரிப்பது, ஒரே ஸ்வரத்தில் நிற்பது என்பதே இந்த நான்கு வகைகளாகும். இந்த நான்கு வகை வர்ணங்களுக்கும் முறையே ஆரோஹி வர்ணம், அவரோஹி வர்ணம், சஞ்சாரி வர்ணம், ஸ்தாயி வர்ணம் என்ற பெயர்

கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆரோஹி, அவரோஹி, சஞ்சாரி என்ற மூன்று வர்ணங்களுள் ஒவ்வொரு ராகமும் ஒரே வர்ணத்தில்தான் ப்ரகாசத்தை அடைகிறது. ஆரோஹி வர்ணத்தில் ப்ரகாசத்தை அடையும் ராகங்களில் சில. அவரோஹி வர்ணத்தில் சில. சஞ்சாரி வர்ணத்தில் வேறு சில. இதன் காரணத்தை விசாரிப்போம். ராகச் சாயைக்கு ஆதாரமான மூர்ச்சனை, க்ரமசஞ்சாரம் இவற்றின் முறையைப் பற்றி நாம் விவரிக்கும்போது அவற்றிற்கு அடிப்படைத் தத்துவம் என்ன என்பதை விளக்கினேம். சங்கீதத்தில் ஒவ்வொரு பிடியும் அதன் முதல் ஸ்வரத்தின் ரஸபாவத்தை உடையதாக இருக்கும் என்பதே அந்த அடிப்படை தத்துவம். ஒவ்வொரு மூர்ச்சனையிலும் ஏழு ஸ்வரம் வரையில் ஏறி ஏழு ஸ்வரம் திரும்பவும் இறங்கு கிறோம். ஓர் மூர்ச்சனை ஷட்ஜத்தில் ஆரம்பிப்பதாக வைத்துக் கொள்வோம். அதன் ஏறும் பகுதி ஷட்ஜத்தில் ஆரம்பிக்கிறது. அதனுல் அதன் ரஸபாவம் வீர, ரௌத்ர அத்புதம் இவைகளில் ஒன்ருகும். அதே மூர்ச்சனையின் இறங்கும் பாகம் ஷட்ஜத்தின் ஏழாவது ஸ்வரமாகிய நிஷா தத்திலிருந்து ஆரம்பிக்கிறது. ஆகையால் அதில் ப்ரகா சிக்கும் ரஸம் கருணரஸம். ஆகையால் ஒரே ரஸபாவத் தோடுகூடிய ஒரே வகையான சாயையே ஒரு ராகத்தில் அமையவேண்டியது அவசியமாகையால் ராகத்தின் ப்ரகாசம் மூர்ச்சனையின் ஏறும் பகுதி இறங்கும் பகுதி இரண்டிலும் அமைய முடியாது. இதே யுக்தி க்ரமசஞ்சாரத் திற்கும் பொருந்தும். ஆகையால் ஒவ்வொரு ராகத்திற்கும் அதற்குரிய ஓர் வர்ணம் உண்டு. இது மிகவும் முக்கியமான லக்ஷணம். ஏனெனில் ராகச் சாயைக் காப்பாற்ற வேண்டு மானுல் அதற்குரிய வர்ணத்திலேயே சஞ்சாரம் செய்ய வேண்டும். ஆனுலும் ஆரோஹியில் ப்ரகாசத்தைபடையக் கூடிய ராகங்களில் ஆரோஹியில் சஞ்சாரம் செய்யும்போது இறங்கு முகமாக சஞ்சாரம் செய்தபிறகே மறுபடியும் ஆரோஹி சஞ்சாரம் செய்யவேண்டிய அவசியம் இருக் கிறது இதில் ஏற்படும் அவரோஹி சஞ்சாரம் ராகச் சாயையைப் பெரும்பாலும் உடையதாக ஏற்படாது. இந்த மாதிரி இடங்களில்தான் பல ராகங்களில் ஒரே வகையான சஞ்சாரம் இருப்பதாக நமக்குத் தோற்றம் ஏற்படுகிறது. ராகத்திற்குரியதல்லாத சஞ்சாரங்களில் மிகவும் குறைவாக

சஞ்சாரம் செய்தாலொழிய ராகத்தின் ஜீவகளை குறையும். இதை ஒவ்வொரு சங்கீத வித்வானும் தனது ஸ்வானுபவத்திலேயே ஒவ்வொரு ராகத்தின் சஞ்சாரத்திலும் கவனத்தைச் செலுத்திக் கண்டு கொள்ளலாம்.

அடுத்த லக்ஷணம் அலங்காரம் என்பது. அலங்காரம் என்றால் ராகத்திற்குரிய வர்ணத்தில் பலவகையான விசித்திரமான மாறுபாடுகளைச் செய்வதற்குப் பெயர். ஒவ்வொரு வர்ணத்திலும் செய்யக்கூடிய விசித்திரமான சஞ்சாரங்களைப் பற்றி நமது நூல்கள் விரிவாகச் சொல்லியிருக்கின்றன. அவற்றைக் கவனித்து அந்தந்த ராகத்திற்குப் பொருத்தமாக உள்ளவைகளைக் கையாளுவதினால ராகத்தின் வசீகர சக்தி அதிகரிக்கும். நாலாவது வர்ணமான ஸ்தாயி வர்ணத்தின் அலங்காரங்களே மிகவும் முக்கியம் வாய்ந்தவை. இந்த அலங்காரமே ராகத்திற்கு உயிர் போன்ற அம்சம். ஸ்தாயிவர்ணம் என்றால் ஒரு ஸ்வரத்தில் கார்வை கொடுத்து நிற்பதுஎன்று அர்த்தம். ஒரேஸ்வரத்தில் ஒவ்வொரு ராகத்திற்கும் உரிய ஒவ்வொரு வகைக் கார்வை சொல்லப்பட்டிருக்கிறது. சில சமயங்களில் ஒரு ராகத்தை சம்பிரதாய வித்வான்கள் பாட ஆரம்பிக்கும்போது இரண்டொரு ஸ்வரங்களின் மாதிரியைகொண்டு அது என்ன ராகம் என்பதை நாம் அநேகமாகக் கண்டுகொள்கிறோம். இதைக் கார்வையின் பேதத்தினாலேயே தெரிந்து கொள்கிறோம். ஒவ்வொரு ஸ்வரத்திலும் 7 வகையான கார்வை கொடுக்கலாம் என்று நமது நூல்கள் சொல்லுகின்றன. இதை நாம் புரிந்துகொள்ள வேண்டுமானால் ஒவ்வொரு ஸ்வரமும் உச்சரிக்கப்படும்போது ஓர் அலைபோன்ற ஏற்றத்தாழ்ச்சி அல்லது கன நயத்தோடே உச்சரிக்கப்படுகிறது என்பதை நாம் கவனிக்கவேண்டும். ஒவ்வொரு ஸ்வரமும் ரஞ்சனத்தைக் கொடுக்கும் சக்தி வாய்ந்தது. அந்தக் காரணத்தினாலேயே அதற்கு ஸ்வரம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. ஒரேமாதிரியாக கன நயமில்லாமல் உச்சரித்தால் ரஞ்சனம் உண்டாகாது. இந்தக் கன நயத்தை முன்னும் பின்னும் அமைப்பதில் பலவகை மாறுபாடுகளைச் செய்யலாம். ஸ்வரத்தை மெதுவாக ஆரம்பித்து பிறகு கம்பீரமாக்கலாம்; அல்லது கம்பீரமாக ஆரம்பித்து மடக்கலாம். முதலில் மெதுவாக ஆரம்பித்து கம்பீரமாகி

மறுபடியும் மடங்கலாம். ஆரம்பத்திலும் கடைசியிலும் கம்பீரமாகவும் இடையே மெதுவாகவும் உச்சரிக்கலாம். இவைகளே முக்கியமான மாறுபாடுகள். இவைகளுக்குத் தனித்தனியே பெயர்களும் ஏற்பட்டிருக்கின்றன. உச்சரிப்பு மெதுவாக இருக்கும் பகுதிக்கு 'ப்ரஸங்கம்' என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். மெதுவான பகுதி முதலிலோ, கடைசியிலோ, நடுவிலோ அல்லது முதலிலும் கடைசியிலுமோ இருக்கலாம். இதைப் பொறுத்து இவைகளுக்கு முறையே ப்ரஸங்காதி, ப்ரஸங் காந்தம், ப்ரஸங்க மத்யம், ப்ரஸங் காத்யந்தம் என்ற பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த உச்சரிப்பின் வகையில் ஒவ்வொரு ராகத்திற்கும் அதற்கே உரிய ஓர் வகை உண்டு. இந்த லக்ஷணம் சங்கீத ரத்னகரத்தில் ஒவ்வொரு ராகத்திற்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் பிந்திய நூல்களில் இந்த லக்ஷணம் சொல்லப்படவில்லை. இதை நன்றாகப் புரிந்து கொள்வதற்காக சில ராகங்களின் கார்வைகள் சொல்லப் படுகிறது.

ப்ரஸங்காதி என்னும் கார்வை பைரவி, யதுகுல காம்போதி, தேவகாந்தாரி, ஸ்ரீராகம் முதலிய ராகங்களில் அமைந்திருக்கிறது. இந்த ராகங்களில் ஒவ்வொரு ஸ்வரத்தையும் மெதுவாக ஆரம்பித்துக் கம்பீரமாகவே முடிக்க வேண்டும்.

ப்ரஸங்காந்தம் என்னும் கார்வை மாஞ்சி, கமாஸ், ஆரபி, மத்யமாவதி, கல்யாணி முதலிய ராகங்களில் அமைந்திருக்கிறது. இந்த ராகங்களில் ஸ்வரங்கள் கம்பீரமாக ஆரம்பித்து அமைதியில் ஒடுங்கவேண்டும். பைரவிக்கும், மாஞ்சிக்கும், தேவகாந்தாரிக்கும், ஆரபிக்கும் இந்தக் கார்வை வித்தியாசமே ராகச் சாயைக்கு மிகவும் முக்கியமானது.

ப்ரஸங்காத்யந்தம் என்னும் கார்வை முகாரி, காம்போதி, பேகடா, கானடா முதலிய ராகங்களில் அமைந்திருக்கிறது. காம்போதிக்கும், யதுகுல காம்போதிக்கு இந்தக் கார்வை வித்தியாசம் ராகச்சாயைக்கு முக்கியமானது.

ப்ரஸங்க மத்யம் என்னும் கார்வை உசேனி, நாட்டக் குறிஞ்சி, மணிரங்கு, சங்கராபரணம் முதலிய ராகங்களில் அமைந்திருக்கிறது. மணிரங்கு, ஸ்ரீராகம், மத்யமாவதி

ராகங்களில் இந்தக் கார்வை வித்தியாசமே ராகச்சாயைக்கு மிகவும் முக்கியம்.

இந்த நான்கு வகைக் கார்வைகளோடு மேலும் மூன்று வகைக் கார்வைகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

கன நயங்கள் மூன்று நான்கு தடவை நீண்டும் குறுகியும் சேர்ந்து அமைந்திருக்கும் கார்வைக்கும் க்ரமவிரேசிதம் என்று பெயர். இது விசேஷமாக ஸஹானு ராகத்தில் அமைந்திருக்கிறது.

ஸ்வரத்தை உச்சரிக்கும்போது ஸ்வரம் மேலே விரிந்து கொண்டுபோகும் கார்வைக்கு ப்ரஸ்தாரம் என்று பெயர். அதைப்போலவே உச்சரிக்கும்போது ஸ்வரம் ஒடுங்கி வந்தால் அதற்கு ப்ரஸாதம் என்று பெயர். பெரும்பாலும் ப்ரஸ்தாரமும் ப்ரஸாதமும் ஒரே ராகத்தில் மேல் கோடியிலும் கீழ்க்கோடியிலும் ப்ரயோகிக்கப்படுகின்றன. உதாரணமாக ஸ்ரீராகத்தில் காந்தாரத்தில் ப்ரஸ்தாரமும், பஞ்சமத்தில் ப்ரஸாதமும் அமைந்திருக்கின்றன. மற்ற ஸ்வரங்களில் ஏற்கெனவே சொன்னபடி ப்ரஸங்காதி என்ற கார்வையே பேசுகிறது.

நமது சங்கீத சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கும் ராக அமைப்பும், ராக லக்ஷணங்களும் இதுவரை சொல்லப்பட்டன.

இந்த வெளியீட்டில் ஆலாபனைகளும் டாயங்களும் 9 ராகங்களுக்குக் கொடுக்கப் பட்டிருக்கின்றன. ஸஹாஜி மஹாராஜாவினுல் சேகரிக்கப்பட்ட ஆலாபங்களில் 2 வகை இருக்கின்றன. ஒரு வகைக்குத் 'காத்ரதண்டி' என்று பெயர். மற்றொரு வகைக்கு 'ஜந்த்ரதண்டி' என்று பெயர். இவை முறையே வாய்ப் பாட்டுக்கும் வீணையில் வாசிப்பதற்கும் உரியவை. காத்ரதண்டியில் ஸ்வரங்களுக்கு அடியில் பாடுவதற்காக 'தம்நம்' என்ற சொற்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சில ராகங்களுக்கு காத்ரதண்டி கிடைக்கவில்லை. சுவடிகளில் ஸ்வரங்களுக்கு மந்த்ர மத்ய தார ஸ்தாயிகள் குறிக்கப்படவில்லை. அதைப் பதிப்பிக்கும்போது குறிப்பிடவேண்டியது அவசியமாயிற்று. அதிருஷ்ட வச

மாக சங்கீத ஸுதா என்னும் நூலில் 50 ராகங்களுக்கு ஆலாபனையின் ஒவ்வொரு பகுதியும் எந்த ஸ்தாயியில் எந்த ஸ்வரத்தில் ஆரம்பித்து எந்த ஸ்தாயியில் எந்த ஸ்வரத்தில் முடிகிறது என்ற விபரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. பெரும்பாலும் அந்த நூலில் கண்டபடியே இந்த ஆலாபங்களும் ஏற்பட்டிருக்கின்றன. சிலசமயங்களில் சில மாறுபாடுகளும் காணப்படுகின்றன. கூடுமான வரையில் இந்த நூலை அனுசரித்தே ஸ்தாயிகள் குறிக்கப்பட்டிருக்கின்றன.

ஆலாபம் ஐந்து பாகமாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. முதல் பகுதிக்கு ஆக்ஷிப்திகை அல்லது ஆயத்தம் என்று பெயர். இதில் ராகம் ஆரம்பிக்கப்பட்டு ஸ்வரங்கள் விளம்பமாகவும் நன்ருக அனுபவிக்கக்கூடிய முறையிலும் ஜீவ ஸ்வரம் என்னும் அம்ச ஸ்வரத்தில் ஆரம்பித்து முன்னும் பின்னும் அசைந்து ஒவ்வொரு ஸ்வரமாக சேர்த்துக் கொண்டு ராகச்சாயை நன்ருக அமைக்கப் படுகிறது. ஆயத்தம் என்பது தமிழ்ச் சொல்.

இரண்டாவது பகுதிக்கு ராகவர்த்தனி அல்லது எடுப்பு என்று பெயர். ராகத்தின் ஸ்வரூபம் தெளிவாக அமைந்து விட்டதால் ராகவர்த்தனி என்னும் எடுப்பில் ராகத்தை விஸ்தரிக்க ஆரம்பிக்கிறோம். இந்தப் பகுதிக்குக் கரணம் என்ற பெயரும் ஏற்பட்டிருக்கிறது. ராகவர்த்தனி இரண்டு மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு முதல் ராகவர்த்தனி, இரண்டாவது ராகவர்த்தனி, மூன்ருவது ராகவர்த்தனி என்றும் அழைக்கப்படுகின்றன. முதல் ராகவர்த்தனிக்கு எடுப்பு என்றும் இரண்டாவது ராக வர்த்தனிக்கு உத்க்ராஹம் என்ற பெயரும் ஏற்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பகுதியும் முடியும் இடத்திற்கு மூக்தாயி என்று பெயர். அது அடுத்த ராகவர்த்தனியைப் பிரிப்பதனல் விதாரி (பிரிப்பது) என்றும் அழைக்கப்படுகிறது. ஒவ்வொரு ராக வர்த்தனியிலும் சஞ்சாரங்கள் மந்த்ர, மத்ய, தாரம் என்றும் மூன்று ஸ்தாயிகளிலும் விளம்பம், மத்யம், த்ருதம் என்ற மூன்று காலங்களிலும் ஏற்பட்டிருந்தபோதிலும், ஒவ்வொன்றிலும் ஒருவகை ஸ்தாயியும் ஒரு வகைக் காலமும் விசேஷமாக ப்ரயோகிக்கப் படுகிறது. முக்தாயிகளில் மூன்று ஸ்தாயி சஞ்சாரம் காணப்படுகிறது.

இதற்கடுத்த பகுதிக்கு ஸ்தாயி என்று பெயர். ஸ்தாயி என்ற சொல் இரண்டு மூன்று பொருள்களில் நமது நூல்களில் உபயோகப் பட்டிருப்பது கவனிக்கத்தக்கதது. இந்தப்பகுதியில் ராகத்தில் நின்று பாடக்கூடிய ஒவ்வொரு ஸ்வரத்தையும் ஆதாரமாக வைத்துக்கொண்டு ராக விஸ்தாரத்திற்கான சஞ்சாரம் முறையாகச் செய்யப்படுகிறது. நின்று பாடக்கூடிய ஸ்வரங்களுக்கு அபந்யாஸ ஸ்வரங்கள் என்று பெயர். இந்த ராகவிஸ்தாரம் முதலில் தார ஷட்ஜத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு ஆரம்பிக்கப் படுகிறது. பிறகு மற்ற அபந்யாஸ ஸ்வரங்ள் ஆதாரமாக எடுத்துக் கொள்ளப்படுகின்றன. ஒவ்வொரு ஆதார ஸ்வரத்திலும் நின்று பாடும்போது ஆரோஹ வரிசையிலும், அவரோஹ வரிசையிலும் சஞ்சாரம் செய்யப் படுகிறது. பொதுவாக ராகங்களில் தாரஷட்ஜ ஸ்தாயி, மத்யஷட்ஜ ஸ்தாயி, மத்யம ஸ்தாயி, பஞ்சம ஸ்தாயி இவைகள் காணப் படுகின்றன. சிற்சில ராகங்களில் அவற்றிற்குரிய மற்ற அபந்யாஸ ஸ்வரங்களும் ஸ்தாயி ஸ்வரங்களாகக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

இதற்கடுத்த பகுதிக்கு மகரிணி என்று பெயர். இதுவே ஆலாபத்தின் முடிவு. இதற்கு வர்த்தனி என்று மற்றொரு பெயரும் கொடுக்கப்பட்டிருக்கிறது. மகரிணி முடியும் பகுதிக்கு முக்தாயி அல்லது ந்யாஸம் என்ற பெயர் ஏற் பட்டிருக்கிறது.

ஸங்கீத ஸுதாவின் ஆலாபனைப் பகுதிகளின் முறை இதில் கண்ட 9 ராகங்களுக்கும் கொடுக்கப்படுகிறது.

1. நாட்ட

| | | | | |
|---|---|---|---|---|
| ஆயத்தம் | ஸ் | ரி | ஸ் | ஸ் |
| எடுப்பு | ப | ப் | ம | ஸ |
| முக்தாயி | ம | ரி̈ | ரி | ஸ் |
| உத்க்ராஹம் | ம் | ரி̈ | ம | ஸ |
| முக்தாயி | ம | ரி̈ | ம | ஸ் |

| | | | | |
|---|---|---|---|---|
| ஸ்தாயி – ஷட்ஜம் | ஸ் | நி | ஸ் | |
| பஞ்சமம் | ப | ப் | ப | |
| மத்யமம் | ம | ம் | ம | |
| ரிஷபம் | ரி | ரி | ரி | |
| மத்யஷட்ஜம் | ஸ | ஸ் | ஸ | |
| மகரிணி | ஸ | நி | ஸ | |
| முக்தாயி | ரி | ரி | ஸ் | ஸ் |

## 2. ஸ்ரீராகம்

| | | | | |
|---|---|---|---|---|
| ஆயத்தம் | நி | ரி | க்ா | ஸ் |
| எடுப்பு | ரி | ப் | ஸ | ஸ |
| முக்தாயி | ரி | க்ா | ப | ஸ் |
| உத்க்ராஹம் | ம் | நி | ஸ | ஸ |
| முக்தாயி | ஸ் | ரி | க்ா | ஸ் |
| ஸ்தாயி – ஷட்ஜம் | ஸ் | நி | ஸ் | |
| பஞ்சமம் | ப | ப் | ப | |
| மத்யஷட்ஜம் | ஸ | ஸ் | ஸ | |
| மகரிணி | ஸ | நி | ஸ | ஸ |
| முக்தாயி | ஸ் | ரி | க்ா | ஸ் |

## 3. கௌள

| | | | | |
|---|---|---|---|---|
| ஆயத்தம் | ரி | ரி | ம் | ஸ் |
| எடுப்பு | ரி | நி | ஸ | ஸ |
| முக்தாயி | ப | ரி | ம் | ஸ் |
| உத்க்ராஹம் | ஸ் | நி | ஸ | ஸ |
| முக்தாயி | ஸ் | ரி | ம் | ஸ் |
| ஸ்தாயி – ஷட்ஜம் | ஸ் | நி | ஸ் | |
| பஞ்சமம் | ப | ப் | ப | |
| ரிஷபம் | ரி | ரி | ரி | |
| மத்யஷட்ஜம் | ஸ | ஸ் | ஸ | |
| மகரிணி | ஸ | நி | ஸ | ஸ |
| முக்தாயி | ப | ரி | ம் | ஸ் |

**4. ஆரபி**

| | | | | |
|---|---|---|---|---|
| ஆயத்தம் | ஸ் | ம | ம் | ஸ் |
| எடுப்பு | ம | த் | ஸ | ஸ |
| மூக்தாயி | ம | ரி | ம் | ஸ் |
| உத்க்ராஹம் | ரி̇ | த் | ஸ | ஸ |
| மூக்தாயி | ஸ் | ஸ | ம் | ஸ் |
| ஸ்தாயி – ஷட்ஜம் | ஸ் | த் | ப | ஸ் |
| மத்யஷட்ஜம் | ஸ | ஸ் | ஸ | |
| மகரிணி | த் | ஸ | ஸ | |
| மூக்தாயி | ம | ரி | ம் | ஸ் |

**5. வராளி**

| | | | | |
|---|---|---|---|---|
| ஆயத்தம் | க்ா | ம | க்ா | ஸ் |
| எடுப்பு | ஸ | நி̇ | ஸ | ஸ |
| மூக்தாயி | ப | ஸ | ம் | ஸ் |
| உத்க்ராஹம் | ப | நி̇ | ஸ | ஸ |
| மூக்தாயி | ஸ் | கா | ம் | ஸ் |
| ஸ்தாயி – ஷட்ஜம் | ஸ் | நி̇ | ஸ் | |
| மத்யமம் | ம | ம் | ம | |
| ரிஷபம் | ரி | ரி̇ | ரி | |
| மத்யஷட்ஜம் | ஸ | ஸ் | ஸ | |
| மகரிணி | ஸ | நி̇ | ஸ | ஸ |
| மூக்தாயி | ப | ஸ | ம் | ஸ் |

**6. சங்கராபரணம்**

| | | | | |
|---|---|---|---|---|
| ஆயத்தம் | ம | ரி | ம் | ஸ் |
| எடுப்பு | ரி̇ | த் | ஸ | ஸ் |
| மூக்தாயி | ஸ் | ரி | ம் | ஸ் |
| ஸ்தாயி – ஷட்ஜம் | ஸ் | த் | ஸ் | |
| பஞ்சமம் | ப | ப் | ப | |
| ரிஷபம் | ரி | ரி̇ | ரி | |
| மத்யஷட்ஜம் | ஸ | ஸ் | ஸ | |
| மகரிணி | ஸ | த் | ஸ | ஸ |
| மூக்தாயி | ஸ் | ரி | ம் | ஸ் |

7. காம்போதி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆயத்தம் | ரி | க் | ம் | க | ஸ் |
| எடுப்பு | த | ம் | ஸ | ஸ | |
| முக்தாயி | ம | ம் | ஸ் | | |
| ஸ்தாயி – பஞ்சமம் | ப | ப் | ப | | |
| காந்தாரம் | க | க் | க | | |
| மத்யஷட்ஜம் | ஸ | ஸ் | ஸ | | |
| மகரிணி | ஸ | நி | ஸ | ஸ | |
| முக்தாயி | ம | ம் | ஸ் | | |

8. ரீதி கௌள

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆயத்தம் | நி | ம | ம் | ஸ் | |
| எடுப்பு | க | த் | ஸ | ஸ | |
| முக்தாயி | ப | ஸ | ரி | ம் | ஸ |
| உத்க்ராஹம் | எடுப்பைப்போல் | | | | |
| முக்தாயி | எடுப்பு முக்தாயியைப்போல் | | | | |
| ஸ்தாயி – ஷட்ஜம் | ஸ் | நி | ஸ் | | |
| மத்யமம் | ம | ம் | ம | | |
| ரிஷபம் | ரி | ரி | ரி | | |
| மகரிணி | ஸ | நி | ஸ | ஸ | |
| முக்தாயி | ப | ஸ | ரி | ம் | ஸ |

9. மத்யமாதி

| | | | | |
|---|---|---|---|---|
| ஆயத்தம் | ஸ் | ரி | ம் | ஸ் |
| எடுப்பு | ப் | நி | ஸ | ஸ |
| முக்தாயி | ஸ் | ரி | ம் | ஸ |
| உத்க்ராஹம் | ப் | நி | ஸ | ஸ |
| முக்தாயி | ஸ் | ரி | ம் | ஸ |
| ஸ்தாயி – ஷட்ஜம் | ஸ் | த் | ('க'வையும் 'த' வையும் விட்டுவிட்டு) | |
| மத்யமம் | ம | ம் | ம | |
| மத்யஷட்ஜம் | ஸ | ஸ் | ஸ | |
| மகரிணி | ஸ | நி | ஸ | ஸ் |
| முக்தாயி | ஸ் | ரி | ம் | ஸ |

